[Sri K. Vinayakam] [4th March 1961.

நம்மைச் சேர்ந்ததாக இருந்தால் இந்த அரசாங்கம் அதை எடுத்துக்கொண்டு இரண்டு மாதத்திற்கு ஒரு முறையாவது ப்ளஷ் அவுட் செய்வதற்கு ஏதாவது ஏற்பாடு செய்வார்களா? அந்த முறையில் அதனுடைய துர் நாற்றத்தை போக்குவதற்கு அரசாங்கம் முயற்சிக்குமா?

THE HON. SRI P. KAKKAN: இதைச் செய்வதற்கு ஒரு கமிட்டியை நியமித்து அது நல்ல முறையில் இதைப்பற்றி பரிசீலனை செய்து அவர்கள் ஒரு ரிப்போர்ட்டைக்கூட கொடுத்திருக்கிறார்கள். அவர்கள் கொடுத்த ரிப்போர்ட்டின்படி 120 லட்சம் ரூபாய் அதற்கு செலவு ஆகும் என்று சொல்லி இருக்கிறார்கள். கூடுமானவரையில் அவர்களுடைய ரிப்போர்ட்டின்படி ஆற்றில் தண்ணீர் எப்பொழுது ஏறி இறங்கிக்கொண்டு இருக்கும் படியும் அதற்கு வேண்டிய சாமான்களை எல்லாம் தருவித்து வைத்துக்கொள்ளவேண்டும் என்றும், அதற்கு என்ன செலவாகும் என்பதற்கு கணக்கெடுத்து அதை வைத்துக்கொள்ளவேண்டும் என்றும், கூவம் நதியினுடைய வாய் (mouth) நல்ல முறையில் வைத்துக்கொண்டு அதன் வழியாக எப்பொழுதும் தண்ணீர் வந்து கொண்டும் போய்க்கொண்டும் இருக்கும்படியான அளவில் வைத்துக்கொள்ளவேண்டும் என்றும் சொல்லி இருக்கிறார்கள். அந்த முறையில் நல்ல முடிவு ஏற்படும் என்று நம்புகிறேன்.

SRI A. V. P. ASAITHAMBI: கூவம் நதியை மூடி அதன்மீது ரயில் போக்குவரத்து ஏற்பாடு செய்வது சாத்தியம் இல்லை என்று மத்திய அரசாங்க உதவி ரயில்வே அமைச்சர் கனம் ராமசாமி அவர்கள் பேசி இருக்கிறாரே, அப்படி அவர் பேசியது இந்த அரசாங்கத்தைக் கேட்டுக்கொண்டு பேசினாரா அல்லது அவராகவே அப்படி பேசியிருக்கிறாரா? அப்படி அவர் இந்த அரசாங்கத்தைக் கேட்காமல் பேசியிருந்தால் அதைப்பற்றி இந்த அரசாங்கம் பரிசீலனை செய்து ஒரு முடிவுக்கு வருமா?

MR. SPEAKER: இந்தக் கேள்வி மூலக் கேள்வியிலிருந்து எப்படி எழும்?

THE HON. SRI P. KAKKAN: அதைப்பற்றி எங்களுக்குத் தெரியாது. அவர் சொல்லியபடி செயல்பட முடியாது என்று முடிவு செய்திருக்கிறார்கள்.

MR. SPEAKER: கேள்விகள் முடிவடைந்தன.

[*Note*.—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—ANNOUNCEMENTS

(1) THE MADRAS AGRICULTURAL INCOME-TAX (AMENDMENT) BILL, 1961.

MR. SPEAKER: I have to announce to the House that the Governor has given his recommendation for the introduction in the Legislative Assembly of the Madras Agricultural Incomee-tax (Amendment) Bill, 1961.